உ

கணபதிதுணை.

# குமரகுருபரசுவாமிகள்
அருளிச்செய்த
# காசிதுண்டிராஜகணபதி திருவருட்பா.
# காசிகதிர்காமவேலர் திருவருட்பா.
# காசிவிசுவநாதர் திருவருட்பா.
# காசிகேதாரகௌரி திருவருட்பா

இவை

அஷ்டாவதானம் - பூவை

கலியாணசுந்தரமுதலியாரால்

பரிசோதிக்கப்பட்டு

சென்னை-சூளை
நிரஞ்சனிவிலாச அச்சுயந்திரசாலையிற்
பதிப்பிக்கப்பட்டது.

1892ஆ.

கணபதி துணை.



# காசி துண்டிராஜகணபதி திருவருட்பா.



சீர்கொண்ட காசிநகர்
சேர்துண்டி ராசனெனும்
பேர்கொண்ட வைங்கரற்குப்
பேசுபுகழ்த்-தார்கொண்ட
நற்றிருப்பாட் டிணைந்து
ஞாலமிசைத் தொண்டரெலாம்
கற்றிருப்பார் மேலாங் கதி.



ஓங்காரவடிவான வுன்பாததாமரையு மு
பயபரிபுரமறைகளும்-உதிக்கின்றசெங்கதிர்
களொருகோடிநிகரொளியு முத்தூளநீற்றி
னொளியும், பாங்கார்கஜானனமு முககரமு

ம்வளர்புயப்பவளாசலங்களுன்கும்-பாசமுட னங்குசங் கொம்போரிலட்டுகேம்பகுஷமொடு வைத்தகரமும், நீங்காதவருண்மாரி பொழி யுந்த்ரியம்பகமு நிறையுமும்மதமாரியும்- நீள் சடாடவியும்வெண் பிறையுமொருதொந்தியு நெஞ்சிலொருகாலுமறவேன், காங்கேயன் மகிழ்தமைய னேகங்கைந.திபெருகு காசிவா ழ் துண்டிராச-கணபதியெனும்பெரிய குண மேருவேயருட்கருணாநிதிக்கடவுளே. (௯)

அருளாலுருக்கொண்ட வானந்தவெள்ள மேயனந்தசூரியருதயமே- ஆயிரங்கோடிசந் திரருதயமேயின்ப மானமழைபொழிமேக மே, திருவேபெருஞ்செல்வ மேகாமதேனு வேசிந்தாமணிக்குவியலே - தேனுவின்பாலு டன்கற்பகப்பூவிலெழு செந்தேன்கலந்தகட லே, தருவானகற்பகச் சோலையேயெல்லாந் தரும்பெரியபதுமநிதியே- சங்கநிதியேயுண் ண வுண்ணத்தெவிட்டாத தண்ணமிர்தின நிமதுரமே-சுருகூலமேயென் றுனைப்பாடியு

ருகவருள் காசிவாழ்துண்டிராச-கணபதியெ
னும்பெரிய குணமேருவேயருட் கருணாநிதி
க்கடவுளே. (உ)

ஒன்றொருகையிற்கொம்பு வெள்ளியங்க
யிலையா மொருகனகவிம்புரிக்கொம்-புயர்மே
ருகிரியாகு மேனிசெவ்வானமா மோங்குகங்
கணமனந்தன், வன்னிரவிசந்திரன் திருநய
னமேமெனுமகாசலதிகண்மும்மதம் - வளர்
சண்டமாருதஞ் செவிமாருதஞ்சக்ரவாளகிரி
நீடுதிக்கை, பன்னூான்மறைசிலம் போங்கு
காலாக்கினி பரந்தநற்கோபாக்கினி-பரிபாக
னைக்கொண்டு குற்றேவல்கொள்கின்றபரப்பி
ரமமத்தகஜநீ, கன்னெஞ்சனேன்மலக் கர
ட்டைமுரியாததென் காசிவாழ்துண்டிராஜ
கணபதியெனும்பெரிய குணமேருவேயருட்
கருணாநிதிக்கடவுளே. (௩)

குஞ்சரக்கன்றுநீ யொழியாம னிற்கின்ற
கூடமென்னிதயவெளியாம், குழந்தைவடி
வாமிளைய பன்னிருகைமழகளிறு கூடவிளை

யாடிநிற்க, அஞ்சுதொழி லுனதுவிளை யாட்
டாகமதசலம ருள்கிரியைஞானமிச்சை, யா
கவைந்தொழிலடத் தகாரதி நாதவொலி யா
னையுன்பெருமுழக்கா, நெஞ்சினிறைவாந்தி
ரோ தானகோபத்தைநீ நீக்கியென் றற்போ
தமாய், நிறைகவளமருள்வாயி னுலுண்டு கர்
ச்சித்து நீமகிழ்வதென்றோசொலாய், கஞ்ச
ன்முத லோர்தொழக் கங்கைநதிசூழ்பெரிய
காசிவாழ் துண்டிராஜ, கணபதி யெனும்பெ
ரிய குணமேருவேயருட் கருணாநிதிக்கடவு
ளே. (சு)

தேவகணபதி வித்தியா தரர்கள்கணபதி
சிவயோகமுனிகணபதி- சித்தர்கணபதிபூசர்
கணபதிஞானவே திகழிராக்ஷசர் கணபதி,
சேவலமிலசுரர்கண பதிகருடர்கணபதி கின
ர்தயித்தியர்கணபதி - கின்னரர்கள்கணபதி
கிம்புருடர்கணபதி கெந்தருவராங்கணபதி,
பாவமறுபோக பூமியர்களகணபதியம் பரத்
தில்வாசிகள்கணபதி - பசாசர்கணபதியுடக்

கணபதியசுரர்கண பதியுரகராங்கணபதி,கா வலென்றுணைசெய்பதி னெண்கணபதிப்பெ ரிய காசிவாழ்துண்டிராஜ கணபதியெனும் பெரிய குணமேருவே யருட் கருணாநிதிக்க டவுளே. (ரு)

இருவருக்கரிதாகி யெங்குநிறைதந்தையா மேகபரிபூரணர்க்கும் - இந்த்ராதி முப்பத்து முக்கோடிதேவர்க்கு மெண்ணிலாமுனிவரு க்கும், தருமணிகளொளிவிடுங் கணபணுடை யுரக சயனத்துமாமனுர்க்கும். சதுரானன ர்க்குமெண் டிசைநாயகர்க்கும்வளர் சகலபு வனங்களுக்கும், ஒருபூரணப்பிரம மேயென் றுநினைத் துதித் துவப்போடு தங்கள்சென்னி யுபயகர மேற்கொண்டு குட்டியோகற்றொழி ல்க ளொன்றுசெயல் வேண்டுமென்றால், கருதரிய நின்புகழை யெளியனேனறிவனோ காசிவாழ்துண்டிராஜ, கணபதி யெனும்பெ ரிய குணமேருவே யருட் கருணாநிதிக் கட வுளே. (சா)

அண்ணுவுனவிமுத்த மகலாதிருந்துமரு ளாங்கங்கைகந்திபடிந்தும், ஐங்கரத் தெய்வ முனடித்தாமரைப்பூவை யர்ச்சித்திருந்து ம டியேன், மண்ணுதிசாதாந்த மானதே காதி ப்ர பஞ்சமெல்லாமறந்தே, மகோதய மனோ லயானந்தவாழ்வடையாமன் மாளுமெய்ப்பி ணியிலுற்றும், எண்ணுத வெண்ணங்க ளெ ண்ணியும்பகலிலே யிருளின்மூழ்கிக் கிடந்து ம், யானென்று மெனதென்றும் முன்னிலை யைநாடியு மேங்கியிடர்படநீதியோ, கண் ணுளனேயுனைக் கண்டுகுறைதீரவருள் காசி வாழ்துண்டிராஜ, கணபதி யெனும்பெரிய குணமேருவேயருட் கருணுநிதிக் கடவுளே.

உன்னுருவையும்முனக் கிளையவன் னுரு வையு முன்றந்தையருளுருவையும், உன்ன ன்னையுருவையு முன்னடியருருவையு மொ ன்றென்பனிந்தவுருவை, இன்னமென்கண் கொண்டு கண்டிடவுமெய்யடிய ரேவல்செ ய்தேதிரியவும், இணையடிக ளென்சென்னி

வைத்திடவு மருள்பெறவு மின்பவாரிதிமூழ்கவும், அன்னைபிள்ளையையா தரிப்பதெனவேயென்னை யாதரித்தேவல்கொளவும், ஆசைவைத்தேனிந்த வாக்கைவிழு முனமிந்த வாசைதீரப்பெறவனே, கன்னெஞ்சனேன் முன்பு நீவருவதெந்தநாள் காசிவாழ் துண்டிராஜ, கணபதியெனும்பெரிய குணமேருவே யருட் கருணாநிதிக்கடவுளே. (அ)

இரவில்லைபகலில்லை யிலாபதேசங்களில்லை யின்பதுன்பங்களில்லை, யானில்லை யெனதில்லை யிதயமில்லையகிதமில்லை யெண்டிசைகள் காலமில்லை, வரவில்லை போக்கில்லை பாவபுண்ணியமில்லை மரணம்பிறப்புமில்லை, மண்ணுதியாசையில்லை மனமானபேயில்லை மலமாயையில்லையென்று, பரவுபட்டப் பகலெனும்பெரியவுன் வடிவுபார்த்திருக்கின்றவடியார், பாததாமரைபரவி நானுமவர் போலுனைப் பார்க்கவரமென்றருளுவாய், காதலாமலகமென முத்தியருள்கங்கைசூழ் காசிவாழ்

துண்டிராஜ கணபதியெனும்பெரிய குண
மேருவேயருட் கருணாநிதிக்கடவுளே. ௯
தேகபாரம்பொறுக் கப்படுவதில்லையென்
செய்குவேன்றெய்வமேயுன், திருவடித் தா
மரையை நம்பினேனியலாற் றிக்குவேறில்
லையுலகில், ஆகமாகாதுசீ யென்றவரு வருத்
தபேர்க் கருள்வேனெனுஞ்சொல்பொய்யோ
ஐயவுனைமறவாத வானந்தவாழ்வன்றி யமர
ர்வாழ்வும்விரும்பேன், பாகமேயில்லாத நா
ன்வாரணாசியிற் பரவுமொருமணி கர்ணிகை
ப், பாகீரதிக்குள்ள நாயாசமாகமெய்ப் பார
ம்விடவருளளிப்பாய், காகமாதியசரா சர
மெலாங்கதிபெறுங் காசிவாழ் துண்டிராஜ
கணபதியெனும்பெரிய குணமேருவேயருட்
கருணாநிதிக்கடவுளே. ௧௦

துண்டிராஜகணபதி திருவருட்பா

முற்றிற்று.



சிவமயம்.

# காசிகதிர்காமவேலர்

# திருவருட்பா.



உலகடங்கலுமருண வெயிலுமிழுமுபய ரவியொருகோடிநிகர்மேனியும்- உமைமுலை ப்பாலொழுகு கடைவாயுமிளநகையுமுச்சி யுந்திகழ்கொண்டையும், திலதமுஞ்சுட்டியுந் திருநீறுமழகுபொழி திருநுதலுமருண்மாரி சேர் - திருநயனமுங்கருணை வதனமுமம் மைதரு திருமுலைப்பாற்கிண்ணமும், இலகு செங்கைம்மலரு மஞ்சலெனுமொருகரமு மி ருசெவியுமுபயரவியாம்-இருகுண்டலங்களு ம் பாததாமரைகளு மிலங்குங் குழந்தைவடி வாய்க்,கலகலெனவேசிலம்புடியனேன்காண நீகாசிதனிலோடிவருவாய்-கங்கையுமைபால னே கதிர்காமவேலனே கந்தசுவாமிக் கடவு ளே. (க)

தற்பரஞ்சோதியே பூரணப்பிரமமே சது
முகப் பிரமாதியோர்-சதுமறையுமடிமுடிகள்
காணுமலேதேடு சச்சித்ானந்தசிவமே, அற்பு
தானந்தவரு ளமுதமழைமேகமே யனந்த
கல்யாணகுணமாம் - அகண்டபரவெளியே
யெ னுயிரினுக்குயிரோ யருட்கருணை மேரு
கிரியே,சிறபரந்தந்தசிந் தாமணிக்குவியலே
செந்தேனெடுஞ்சலதியே - தெள்ளமுதமே
சன்ம மாற்றுதற் கடியார்கட்டவருமருமரு
ந்தே, கற்பகச்சோலையே யென்றடியனே
னுனைக் கவிமாரிசொரிய வருள்வாய்-கங்கை
யுமைபாலனே கதிர்காமவேலனே கந்தசுவா
மிக்கடவுளே. (உ)

சகலபுவனம்பணி சதாசிவற் கோர்குடிலை
தான்மொழிந்தருள்குருக்கள் - சதுமுகப்பிர
மாவை முடியினிற்குட்டியே தான்சிறையி
டுங் குருக்கள், அகிலசகதண்டகோடிகளெ
லாம் பின்படைத் தருடந்திடும் குருக்கள்-
அகத்தியமகாமுனிக் கருள்செய்துசடைமு

டியி லடிவைத்திடுங் குருக்கள், பகருமுப்ப த்துமுக் கோடிவானவர்மகுடபந்திபணியுங் குருக்கள்-பதினெண்புராணமுமுனிவர்பணி செய்யப் பகர்ந்திடுகுருக்களினிநான், ககன மாருதமென்ன வத்துவிதமாகக் கலந்திடச் செய்தலரிதோ - கங்கையுமைபாலனே கதிர் காமவேலனே கந்தசுவாமிக்கடவுளே. (ந)

திருமகளுகந்தநெடு மால்சக்கரப் படை தேவேந்திரன்வச்சிரம்- சிவன்மழுப்படையூ ழி யனலோடுகாற்றெனச் செட்டிநீவிட்ட நெடுவேல், ஒருகணத்தேவடவை யும்மதியு மிரவியு மொளிக்கவொருகோடியாகி-உக்ரப் ரசண்டரவி யெனவோடி யண்டங்க ளோ ராயிரத்தெட்டினும், வருசூரபன்மனும் வஞ் சக்ரவுஞ்சகிரி வயிறுருடுபெருந்தாரகன், மா ர்மைப்பிளந்ததென் றுலடியனேன்மிக வரு ந்தவேநின்று நோய்செய், கருமமலையைப் பொடிபடுத்தலரிதோவுனது கைவேலினுக்

கருளுவாய், கங்கையுமைபாலனே கதிர்காமவேலனே கந்தசுவாமிக்கடவுளே. ௩

அரிமருகமுருகசரவணபவா வெனுமடியரச்சந்தவிர்த்தருண் மயில், ஆயிரத்தெட்டண்ட முட்டையெனவேயணைத் தசுரனைக் கொன்றிடுமயில், பெரியசுவ சண்டமொடு மேருகிரிகுலகிரி பெருங்கடல்களுள்ளடக்கும், பெருஞ்சக்ரவாளகிரி யனைநொடியினுக்குளே பிரதக்ஷணஞ்செயுமயில், விரிபணுடவியுரக முங்கோடியண்டமும்விழுங்கியே பின்னுமிழ்மயில், வேலநீயேறுமயில் வெகுபராக்கிரமமெனில் வினைபனேன் மாயையென்னும், கரியபாம்பைப்பொடி படுதலரிதோவுன் கலாபமயிலுக்கருளுவாய், கங்கையுமைபாலனே கதிர்காமவேலனே கந்தசுவாமிக்கடவுளே. ௫

தருங்கற்பகடாடவியி விந்த்ராதி வானவர் கடளரச்சமாங்கங்குலுஞ், சக்ராயுதக்கடவுளச்சமிகுகங்குலுஞ் சதுமுகத்தோ னச்சமா

ம், பெருங்கங்குலும்மவுண ராங்கங்குலுந்து
யர் செய்பெரியப்பிரபஞ்சத்துளே பிரியாத
கஙகுலு முன்னடியரானோர்கள் பிறவிக்கு
மூலமான, அருங்கங்குலும்விடிய வேகடுங்
குரலைவிடு மதிபலபராக்கிரமமாம்-அஞ்சிறை
ச்சேவலுன்கைத்துவசமாமென்னி லடியனு
ணவதிமிரமாம், கருங்கங்குலவிடியவே கூவு
தற்கரிதோசொல் காலாயுதத்தினுக்குக் - கங்
கையுமை பாலனேகதிர்காமவேலனே கந்த
சுவாமிக்கடவுளே. (சு)

ஆருக்குவந்திடு விருந்தோவி தென்றுநீயறி
யாதுபோலிருந்தால்- அடியேனையஞ்சலென்
பார்களாரிங்குனக் கடிமைமே லன்பில்லை
யோ, ஊருக்குவந்தவ ளொருத்திபிள்ளைக்கு
முலை யூட்டிடுவளோ.சொல்லுவாய், உனக்க
டிமையாகியு முன்புகழ்கள்பாடியுமெ னுயிர்
வருந்திடனீதியோ, பாருக்குளேகலி யுகத்
திலேகண்கண்ட பரமதெய்வம்மென்றுனைப்
பாருளோர் மெச்சுமது மெய்யாகு மிப்போ

து பாவியேற்கருள்புரிந்தால், காருக்குமதிக வர மழைபொழியுமீராறு கரகமலசர்வஞ்ஞ னே, கங்கையுமைபாலனே கதிர்காமவேல னே கந்தசுவாமிக்கடவுளே. எ

அஞ்சுமுகனுன்பிதா விமயமாமலையுதவு ம மலைநின்னன்னையாகும், அண்ணன்முன்கய முகத் தசுரனுயிர்வீட்டியரு ளைங்கரக் கடவு ளெனடிய, மஞ்சுவணன் மாமனுன் மைத்து னன் மன்மதன் மலரினயனுன்சிடனும்,வா னவர்க ளுன்னடிய ராயிரத்தெட்டண்ட ம ன்னவனுன்வாகனம், கொஞ்சமடியேனையு ன் னடிமையென்றே திடக் குருமுனிக்குந் தமிழருள்,குமரபரசுவாமி யுன்னடியரடியா ர்கள் குற்றேவல்செயவருள்வாய், கஞ்சமலர் முகவள்ளி மணவாளவெங்கும் கவின்றெய் வயானைகணவா, கங்கையுமைபாலனே கதி ர்காமவேலனே கந்தசுவாமிக்கடவுளே. அ

உன்மலர்ப் பாதத்தின் மகிமையு மேன் மையு மும்பதிபுயங்க ளறியும், ஓங்குதலை

ஞானமு மாறுகுணபேதமு மொருநான்முக த்துவேதன், றன்முடியறிந்திடுங் கரபலமு ம்வீரமுந்தகுசூரனங்கையறியும், தருகடை க்கண்ணருளின் ஞானமுந்தீக்ஷையுந் தமிழ் முனிவனேக்கமறியும, மன்மதனுருவறியு நி த்தியமு மழகுமெய் வாழ்வுமானந்த சுகமும் மகிழ்வள்ளிதெய்வயானையுமறிவ ரடியருன் மகிமையெல்லாமறிவரொன், கன்மன மறிந் துருக மாட்டுமோவறியக் கடாக்ஷம்வைத்த ருண்முருகனே, கங்கைபுமைபாலனே கதிர் காமவேலனே கந்தசுவாமிக்கடவுளே, கூ

அடையாளமாம்பரங் குன்றமுத லாறுப தி யம்பலங்காசிகமலை, அணிகோணமாமலை யாதிகேதீச்சர மருள்சம்புகுண்டமாதி, இ டைவிடாதேங்கிறைந் தோமாகிலும்புவி யெ ரும்பாதிகாசிமேவி, இறந்ததென் முன்முத் தி யெய்துமென்றருள்செய்த வெந்தைமொ ழிநம்புதவினல், திடமுடையபத்தியில்லாத வெளியேனுஞ் சிவானந்த நாதனென்னும்,

சிவகாமவாக்கியஞ்சென்னிமேற்சூட்டலாற் சிவகாசிதனிலுறைதலால், கடையேனையும் மடிமை யாக்கத்தகுந்தகுங் கருணாநிதித்தெய்வமே, கங்கையுமைபாலனே கதிர்காமவேலனே கந்தசுவாமிக்கடவுளே. ய

கதிர்காமவேலர்

திருவருட்பா

முற்றிற்று.

—•••—



உ

கணபதிதுணை.

காசி விசுவநாதர்

# திருவருட்பா.



சீரார்பெருந்தடங்கண்ணியொருபாகமுஞ்
சேயுறையுநின்கவானும்-திருமுகத்தாமரையி
னழகொழுகுகருணையுஞ்சிறுநகைநிலாவெறி
ப்பும் நீரார்சடாமகுடமும்பிறையும்வெண்
பொடி நிறைந்தசெம் பவளவடிவும்-நீண்ட
சங்கொடுதோடு பூண்டவிருகாதுமதுநெட்டி
தழ்விரிக்குமிதழித், தாராருமார்புந் த்ரியம்
பகமுமழுமான் றரித்தசெங்கரமலர்களும் -
சரணும்புயங்களுந்தனிவெள்ளை விடையின்
மேற் றமியனேன்காணவருவாய், காராரும
ண்டமுக டொன்றியெங்கும்பரவு கங்கைக
திசூழ்ந்திலங்கும்,காசிவிசுவேசனாந் தேஜோ
சொரூபமே கருணாநிதித்தெய்வமே.

பெற்றதாயும்பிதா வும்பிதாவைப் பெற்ற பெரியவனுமுரியதாயும், பிறவிப் பெரும்பிணிக் கொருமருந்தும்பெரிய பிழைகளெல்லரம்பொறுக்கும், கொற்றவனுநற்றவப் பயனுமிகபரமுங் கொடுத்திடும்பெருவள்ளலும், குறைவற்ற செல்வமும் நிறைவற்ற மெய்ஞ்ஞான குருவுமென்குலதெய்வமும்; மற்றுள்ளசித்தியுஞ் சுற்றமுநீயென்று வந்தடைந்தேனையருளா, மலர்க்கரங்கொண்டுபர மானந்தவமுதூட்டி மதலையென வேவளர்ப்பாய்,கற்றவர்களுள்ளத்தி லுற்றவருணேசனே கைலாசகிரிவாசனே, காசிவிசுவேசனுந்தேஜோசொரூபமே கருணாநிதித்தெய்வமே. ௨

பொன்னாசையென்கின்ற பேய்க்குமயல் செய்கின்ற புவியாசையாம்புலிக்கும், பூவையர்களாசையெனு மாவியொழியச்செயும் புலைவேடர் வெங்கணைக்கும்; என்னாவியேயோ ரிலக்காகவைத்தாயி தென்னவினை யாட்டையனே, ஏழைபங்காளனீ யென்னென்

றுசொல்வதிங் கேழையடியேன்றவிரவோ; முன்னாளிலொருமதுரை நகரினிற்பன்றிக்கு முலைகொடுத்தவனல்லையோ, முருகவேளைப் பெற்ற தந்தையலையோபெரிய மூதுலகிலடியார்மனக், கன்னுருரித்துயினா வாழையின் கனிசெயுங் கருணாப்ரவாகனலையோ, காசிவிசுவேசனுத் தேஜோசொரூபமே கருணாநிதித்தெய்வமே. ரு

கூற்றினிடர் மாற்றவே யவிமுத்த மென்றோதுகோநகரம்வந்தடைந்தேன், கூட்டையுயிர்விடுகால நாட்டுமணிகர்ணிகைக்குலாவுதீரஞ்சேரவும், ஏற்றின்புறத்துன் னிடப்புறம்பிரியாத விமயாசலம்பயந்த, என்னன்னை முன்னுதன் பின்னைவிளையாடவு மிளையவனைமடியில்வைத்தே, ஊற்றெடுக்குங்கருணை முலையமுத மொருகைகொண் டேற்றியெனையொருபிள்ளையா, ஒருகரத்தாற்றடவியருணையனம்வைத்தெடுத் துத்தரியம்வீசுதென்றற், காற்றினலென்களையை மாற்றிடவுநான்கண்

டு கண்குளிரநின்கண்வைப்பாய், காசிவிசு வேசனுந் தேஜோசொரூபமே கருணாநிதிக் கடவுளே. ௬

பண்டுநான்வாரணா சிப்பதியி னுடல்விட்ட பறவைமசகங்கழுகுநான், பன்றியொட்டகங் குதிரைநான்மும்மதம் பாயலருகளியானைநான், மண்டிருமலத்திற் புழுத்தபுழுநானீரில் வாளைநான் வரியரவுநான், மரநானெறும்புநா னென்றொருவருக்கொருவர் மனமகிழ்ந் தேகுலாவும்; அண்டர்தொழ வேகைலை யமலநின்வடிவான வருளுருத்திரநாயன்மார், அவர்களுடனெக்கால மடியனேன் மனிதனென் றகமகிழுநாளெந்தநாள், கண்டவிடமெங்கெங்கு நின்றபரமானந்தகங்கைசூழ், காசிவிசுவேசனுந் தேஜோசொரூபமே கருணாநிதித்தெய்வமே. ௭

சரியைகிரியாயோக ஞானத்தினன்முத்தி சாதித்தநூல்களத்தத். தவமேது மின்றியே யவமேசெய்தாலுமத் தமோமயசராசரங்கள்

நாப்பயிலும்வாரணு சிவிலுடலம் விடிவிந்த நன்மையொன்றைக்கொண்டுமேல், நாற்றடந்தோளுந் த்ரியம்பகமுமோர்வித்த நாரிபாகமுமுரகமார், கிரணசந்திரசடா மகுடமும் பிரமர்தலை கிங்கிணிகளென்றுகட்டிக், கிரீடகோடிகள்வந்து பணியவிந்த்ராதியோர் கேட்டவர முதவுபதமும், கரதலாமலகமெனவேபெறத்தருமுனது கருணைதனை யென்ன சொல்வேன், காசிவிசுவேசனுந் தேஜோசொரூபமே கருணாநிதித்தெய்வமே. கூ

இன்னமெத்தனைநா ளிருக்குமோகாயமென்றேங்குமே நெஞ்சமையோ, இடருடலினன்படுவ தெந்தைநீயல்லாம லிவ்வுலகிலியாவரறிவார். என்னையுன் னடியார்க் குழாத்துடன்சேர்ப்பதற் கின்னமென்னாட் செல்லுமோ, இன்றுவந்தருளுவாய் நாளைவந் தருளுவா யென்றுவழிபார்த்திருப்பேன், அன்னையேயென்னைவந் தஞ்சலென்றுண்டுமெய் வடியரொடுகூட்டுவாயென், றனுதினமுமழு

தழுத மெலிவதல்லாமலிங் கடியனேன் செய்வதென்னே, கன்னலேதேனே கனிந்த கனியேபெரிய கைவல்யமே கங்கைவாழ், காசிவிசுவேசனுந் தேஜோசொரூபமே கருநிதித்தெய்வமே. எ

அங்கண்வானத்தமரர் பிறவிப் பெரும்பிணிக் கருமருந்தெனவு மயன்மால், ஆதியோரரகரா விந்தநதியற்புத மகிலத்துளில்லையெனவும், எங்கண்மலதிமிரபட லங்கிழித் தோட்டுதற் கிரவிசதகோடியெனவும், இந்த்ரசாலப்பகட் டாகும்ப்ர பஞ்சமோ டிரண்டுவிதமாயையென்னும், பங்கமுற்றுங்கழுவ வருஞானவானந்த பரிசுத்தசலதியெனவும்,ப்ரமகல்யாணகுண பரமசிவசத்தியொடுபோகிரதிப்பெயர்புனை, கங்கைநதியைப்புவியி லன்னையெனவைத்தநின் கருணைதனை யென்ன சொல்வேன், காசிவிசுவேசனுந் தேஜோசொரூபமே கருணைநிதித்தெய்வமே. அ

சரணமுன்சரணமல் லாலிங்குவேறில்லை தங்கிடுஞ் சர்வசிவ, தயாபர னெனக்கருள் வை யென் றுன்னை நம்பியுன் சந்நிதியைவந் தடைந்தேன், மரணகாலந்தனின் மணிகர் ணிகைத்துறையில் வந்துசேரச் செய்துநீ மால்வெள்ளை விடையின்மேல் வேலனுமை யவளொடுமுன் வந்தென் வலச்செவியிலே, பரமவுபதேசம்வைத் தாவிபரமானந்த பர மசலதியின்மூழ்கிடப்: பாழானகாயமெய்ப் பாகீரதிப்புனல் படிந்திடவரந்தந்தருள், கர ணங்கடந்தமுழு முதலேசிதாகாசகனகசபை நடராசனே, காசிவிசுவேசனுந் தேஜோசொ ரூபமே கருணாநிதித்தெய்வமே. க

மெய்யென்று பெயர்பெற்ற பொய்யான வென்னுடலம் விடுகாலநானறியவும் - விமல மணிகர்ணிகைத் துறைவந்துசேரவு மெய்க ங்கை நதிமூழ்கவும், துய்யவெண்ணிறங்க மெங்குமேபூசவுஞ் சுத்தகண்டிகைபூணவும்- தொண்டுசெயு மடியார்கடோத்திரஞ் சொல்

வியே சூழ்ந்துகொண்டே நிற்கவும், ஐயந்த நேரத்திலுந்தாமநிற்கவு மைம்பொறிநிற்கவும், அறிவுபரமானந்த சின்மயாகாசநின் னடியிணைகள் சிந்திக்கவும், கைகடெழவாயஞ் செழுத் துச்சரிக்கக் கடாட்சம்வைத்தருளையனே - அறிவுபறமானந்த சின்மயாகாசநின் னடியிணைகள் சிந்திக்கவும்; கைகடொழவாயஞ் செழுத்துச்சரிக்கக் கடாட்சம்வைத்தருளையனே, காசிவிசுவேசனுந் தேஜோசொருபமே கருணாநிதித்தெய்வமே. ௰

காசிவிசுவநாதர் திருவருட்பா

முற்றிற்று.

தேவிதுணை.

காசி கேதாரகௌரி

# திருவருட்பா.



வண்டணிசெய் மலரழகு புரியளகமுங்
கொப்பு வார்குழையுமிருதோடும்வெண், மதி
கோடி யுதயமென வருபிரபை தருமுகமும்
வட்டமிடு சுட்டியொளியும், தண்டரள நவ
ரத்ன வாரமுங்களபமிகு தண்கொங்கையுங்
கவின்செய், சங்குசூடகமொடு பொலிந்திடு
பசுங்கிள்ளை தருமபயவரதகரமும், கண்டொ
டெறுந்தேனு றுங்கனிசெழும்பால்கனிந்தமு
தமனையமொழியும், கமலைகலைமகளமரர் குல
திலதமகளிர்புகழ்கல்யாணசோபனமுமாய்,
அண்டகோடிகளனு தினந்துதிசெய்காசிவா
ழாதாரசத்தியுமையே, அருட்கடைசெய்தா
ளுவாய் கேதாரகௌரிநின் னடிபரவுமடிமை
யென்றே. ௧

செந்தாமரைத்தவி சிருந்தோன் படைத்துத் திருந்துதன்கைசலித்தான், செங்கண் மாலின்றெனை யளித்திட்டளித்தே திடுக்கென்றவன்சலித்தான், அந்தகனுமென்னைத்துரத்திப்பிடித்தவனடிசலித்துடல்சலித்தான், அடியனேனின்றளவெடுத்துடல்சலித்திலனெ ஞணவத்துணிவிதென்னே, சிந்துரத்தந்தமுஞ் சந்தனப்பந்தியுஞ் செய்யலைக்கை வீசியே, செகமகிழவருகங்கை சூழ்காசிநகரினிற் றிகழ்விசாலாக்ஷியுமையே, அந்தரமிலாதெனது முன்வந்துநின்கமல வடியிணை கண்முடியில்வைத்தே, அருட்கடைசெய்தாளுவாய் கேதாரகௌரிநின்னடிபரவுமடிமையென்றே. உ

சிருற்றகயிலாயசிகரமும்பயில்பெருஞ் செம்பொன்மாமேருகிரியும், திகழ்மந்த்ரசயிலமுங் கந்தமாதனமும்விந் தமுநெடியநீலகிரியும், எருற்றுவாழவே யிமயத்தில்வந்துதித்தினிதுவளர்புதல்வியன்றோ, என்மனக்கல்

லையோர் சிகரமென்றெண்ணியே யிருந்தெனை யிரக்ஷியம்மா, காருற்றுறை றசோலையுறு காசிதழையவே கருணையொடு வாழுமுமையே, காரணிபுராதனி நிராதனிசிதானந்த கானத்தில் வாழுமயிலே, ஆருற்றநாயேனிகழ்ந்துவிட்டாலென்னை யாதரிப்பவர்களுண்டோ, அருட்கடைசெய்தாளுவாய் கேதாரகௌரிநின்னடிபரவுமடிமையென்றே. ௩

திருவுற்றமார்பினன் செல்வமொடுநான்முகன் செல்வமிந்திரர்கள்செல்வம், சித்தர்சாரணர்வித்தியாதரர்கள்செல்வமுந்தேவர்மகி ழுறுசெல்வமும், தருவுற்றமாலைசெறி சகராசர்செல்வமுஞ் சார்ந்துளோர்தஞ்செல்வமும், தானென்றுநானென்று வாழுமவர் செல்வமுஞ் சர்வத்ரர்தஞ்செல்வமும்; கருவுற்றபணிலமுற் றுயர்காசிநகர்மேவு கருணகடாக்ஷியுன்றன், கழல்பரவுமடியர்தஞ் செல்வத்திலணுவளவு காணவவர் செல்வமுளதோ, அருவத்திலுருவாகி யுருவத்திலருவா

கு மானிடப்பாகமுறைவாய், அருட்கடை செய்தாளுவாய் கேதாரகௌரிநின்னடிபரவு மடிமையென்றே. ௬

மடுத்தவுதரத்தினின் மிகுத்தனல்படுக்கா து வன்புழுவெடுக்காதுபின், வாயுக்கெடுக்கா து சீதவளிவிடுக்காது வருபனித்துளியளவ தாம், எடுத்தசங்தொடுபெழுதிலா நரம்பீரல் பல் விரதநிணமுதிரமாகி, இருகைகால்கொ ண்டவொரு தண்டமாய் விண்டுவினிருந்து விழுவார்களெனவே, தடுத்தபுவிதனிலதோ முகமதாய்விழவன்னை தன்றுயருமென்றுன் பமும், தாயாகியெங்குநிறை தருவிசாலாக்ஷி நான் சாற்றநீயறியாததோ, அடுத்தடுத்திவ்வு ட லுதித்துவாடாதசுக வானந்தவமலமாக, அருட்கடைசெய்தாளுவாய் கேதாரகௌரி நின் னடிபரவுமடிமையென்றே. ௭

நீரினுறுதண்மையுந் தீயினுறுவெம்மையு நிறைமலரி னுறுநாற்றமும், நிகழெள்ளிலெ

ண்ணெயும் புகழ்பாலினெய்யுமாய் நிறைந்தி ருந்தனனென்னவே, பாரின்மிகு புனலங்கி வாயுவாகாயமும் பகர்சராசரமதெங்கும்,பற் றிநின்றினிதுவள ரன்னமேசொர்ன்னமே பாலலோசனைவல்லியே, சீரின்மிகுமுலகெ லா முதரத்தின்முன்னின்ற செங்கண்மாற ன்றங்கையே, திசைமுகன்முதலமரர் வந்து வந்தினிதுபணி திகழ்பதாம்புயவல்லியே,ஆ ருமாதாரமிலர் கேதாரமேயென்னவறைகுவ துபொய்வார்த்தையோ, அருட்கடைசெய் தாளுவாய் கேதாரகௌரிநின் னடிபரவுமடி மையென்றே. ௬௭

கச்சைப்பழித்துக் கனத்துச்சினத்துக் சதி த்திலகுபச்சையாகிக், கண்கறுத்திடை வெ ளியிலாதிபத்துணை முலைக்கன்னியர்கடம்மா சையும், வைச்சுப்புதைத்துத் திரட்டியனு வளவுமெதிர் வந்திரப்பினுமிடாது,வாடியே தேடியே சாடியேமூடிய மயக்கமுறுபொன் னாசையும், இச்சகத்தியாவையு மெனக்கே

ளக்கென்றேயிருந்துவிடுமெண்ணுசையும், இந்திரியவிடயமய மல்லாதுபேரின்ப வினிய வாழ்வுறுவதுண்டோ, அச்சத்துமாளாதுசச்சிதானந்தசிவ வமலகேவலமருவவே, அருட்கடைசெய்தாளுவாய் கேதாரகௌரிநின் னடிபரவுமடிமையென்றே. எ

வானுற்றமழைமொக்கு ணிகர்செல்வநிலையென மகிழ்ந்துறையுமூடர்முன்போய், வாய்திறந்தெண்ணுன்கு பல்லையுங்காட்டியே மாரனிசூரனென்றே, தானுற்றெடுத்தெடுத்தொருகோடிவாசகஞ் சாற்றமுக நோக்கிடாது, சப்பாணியோநொண்டி யூமையோ செவிடனோ தகுமந்தகாசனிவனோ, கானுற்றமிருகமோ வுயிரிலாத்தேகமோ காணுமிதுவென்கொலென்றே, கருதிடமதத்தினுறை சிறுபேதைதங்களைக் கண்டுதுதி செய்திடாமல், ஆணிற்சிறப்புற்றதேனுவின்கன்றென்ன வமலசகமேவிவாழ, அருட்கடைசெய்தாளுவாய்

கேதாரகௌரிநின் னடிப்ரவு மடிமையெ
ன்றே. ௮

மத்தமாகரியொலியும்வாசிப்பெருக்கொலி
யும் வருமிரதமூரும்மாலியும், மைந்தர்பருவ
ந்தனின் மணஞ்செயொலியும்மகளிர் மங்க
லத்தொலியும்வண்டு, தித்திதிமியென்றுநற
வுண்டுவிளையாடுந் திருத்தவொலிநீத்தவொலி
யும், செந்தமிழ்ப்புலவருட னோராறுசாஸ்தி
ரஞ் செப்பொலியும் வேதவொலியும், சுத்தி
யொடுபிரமரிந் திரன்முதலி னோர்கணனி
துதிசெய்சிவகீதவொலியும், தொண்டரரகர
வென்று பல்லாண்டிசைத்திடுந் தூய்யமந்தி
ரவொலியுடன், அத்தனார்திருவிழா வொலி
பெருகுகாசிவா ழுங்கையற்கண்ணியுமையே,
அருட்கடைசெய்தாளுவாய் கேதாரகௌரி
நின் னடிபரவுமடிமையென்றே. ௯

திங்களணிசெஞ்சடாடவிபுனையும்விசுவே
சர் திருவருள்சிறந்துவாழி, திகழ்விசாலாக்ஷி

யுமை வாழிசண்முகனுடன் சிறுதண்டிரா
ஜன்வாழி, சங்கமுற்றயர்கங்கை நதிவாழி
வயிரவன் சரணும்புயங்கள்வாழி, தருஞான
வாவியும் வாழிமாதவனுடன் றகுதண்டபா
ணிவாழி, புங்கவர்கள்பணிகாசி நகர்வாழி
யாரண புராணசாஸ்திரமும்வாழி, புகழ்மே
வுமிந்நகரி லன்னதானஞ்செயும் புண்ணியர்
களென்றும்வாழி, அங்கங்குதருமஙிதி சரு
வோர்கள்வாழவே யவிமுத்தம் வாழுமுமை
யே, அருட்கடைசெய்தாளுவாய் கேதார
கௌரிநின் னடிபரவுமடிமையென்றே. ௰

காசிகேதாரகௌரி திருவருட்பா

முற்றிற்று.



